# சங்கத்தமிழ் காட்டும் சனாதன தர்மம்

விஷ்ணு சர்மா

சந்தம்
(தேசிய இலக்கியப் பேரவை)
வெளியீடு

ஸ்ரீ விகாரி வருடம் பங்குனி மாதம்
மார்ச் 2020

நூலின் பெயர் : **சங்கத்தமிழ் காட்டும் சனாதன தர்மம்**

ஆசிரியர் : **விஷ்ணு சர்மா**

முதல் பதிப்பு : விகாரி வருடம் பங்குனி (மார்ச் 2020)

வெளியீடு : **சந்தம் தேசிய இலக்கியப் பேரவை.**

மின் அஞ்சல் : venkatkrishvith@gmail.com

விலை : ரூ. **30/-**



**அட்டைப்பட விளக்கம்**

முன் அட்டை : திரண்டமரர் தொழுதேத்தும் திருமால்
(சிலப்பதிகாரம்)
(கம்போடிய நாட்டுக் கோவிலில் உள்ள
திருமால் சிற்பம்)

பின் அட்டை : அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்தல் அரிது.
(திருக்குறள்)
ஒடிசா மாநிலம், கொனார்க்கில் உள்ள
தர்மச்சக்கரக் குறியீடு.

கரையானுக்கு இரையாகாமல்
சங்கத்தமிழ் இலக்கியங்களைக் காத்தருளிய

அருந்தமிழ் அந்தணர்

# உ.வே. சாமிநாத ஐயர் அவர்களுக்கு



இந்நூல்

# சமர்ப்பணம்



**H.RAJA** B.Com., B.L., FCA., Ex.MLA.,
National Secretary
एच . राजा
Bharatiya Janata Party
भारतीय जनता पार्टी
Chairman, Passenger Amenities Committee - Railway Board
अध्यक्ष/ यात्री सुविधा समिति/ रेलवे बोर्ड



Present Address
D42, Doshi Gardens, D block, A Wing,
174, Arcot Road, Vadapalani,
Chennai - 600026, Tamilnadu.
#3,9th Street, Subramaniyapuram,
North Extn, Karaikudi - 630 003.
Mobile : 094433 65650
E.mail : hrajabjp53@gmail.com
girish_surya@yahoo.com



## சங்கத்தமிழ் காட்டும் சனாதன தர்மம் - விஷ்ணு சர்மா

## அணிந்துரை

"சங்கத்தமிழ் காட்டும் சனாதன தர்மம்" என்ற புத்தகத்தை திரு. விஷ்ணு சர்மா அவர்கள் 13 உட் தலைப்புகளின் கீழ் வெளியிட்டுள்ளார். சங்க காலத்தில் நம் தமிழ்ப் புலவர்கள் பாடிய பத்துப்பாட்டு, எட்டுத்தொகை மற்றும் ஐம்பெருங் காப்பியங்களிலிருந்து பல மேற்கோள்கள் காட்டி அக்காலத்துத் தமிழர்கள் இறைவனைப் போற்றுவதையும் அந்தணர்கள் மறைகள் ஓதுவதையும் வேதக் கொள்கையைப் பின்பற்றி அனைத்து தெய்வங்களும் ஓர் இறைவனின் உருவங்களே என்னும் கொள்கைகளை எடுத்துக் காட்டி உள்ளார். திரு. விஷ்ணு சர்மா அவர்களின் இந்த அரிய முயற்சியைப் பாராட்டி இதன் மூலம் நம் பண்டைய தமிழர்கள் இந்து தர்மத்தைப் பேணிகாத்து இப்பொழுது பேசப்படும் பொய்யுரைகளை முறியடிக்க இந்த புத்தகத்தைத் தக்க தருணத்தில் வெளியிடுவதற்கு நான் மகிழ்ச்சி அடைகிறேன். என் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தேசப்பணியில் என்றும்

(H. RAJA)

BJP Central Office : 11, Ashoka Road, New Delhi - 110 001.

# விருட்சத்தை நோக்கி...

'சந்தம்' - தேசிய இலக்கியப் பேரவை, 'தமிழகம் என்றும் தேசியத்தின் பக்கமே' என்ற சிந்தனையை மையமாகக் கொண்டு செயல்படும் அமைப்பு ஆகும்.

தேசிய சிந்தனை கொண்ட படைப்புகளை அறிமுகம் செய்தல், படைப்பாளர்களை கௌரவித்தல், புதிய படைப்பாளர்களை ஊக்கப்படுத்துதல் ஆகிய பணிகளை மேற்கொண்டு வரும் பேரவையின் சார்பாக வெளிவரும் முதல் படைப்பு இந்நூல்.

ஆசிரியர் 'விஷ்ணு சர்மா' முகநூல் வட்டத்தில் மிகப் பிரபலமானவர். தமிழ் இலக்கியப் பற்று கொண்ட குடும்பப் பின்புலத்தின் காரணமாக பொறியியல் பட்டதாரியாக இருந்தபோதும் தமிழார்வம் மிக்கவராக விளங்குபவர்.

பாரத தேசத்தின் பண்பாட்டு அடையாளமான சனாதன தர்மக் கருத்துகள் சங்கத் தமிழ் இலக்கியங்களில் நிரம்பி இருப்பதை அறிமுகம் செய்யும் விதமாக இந்நூலை எழுதி உள்ளார்.

நூல் விதையளவு சிறியது. எதிர்காலத்தில் விருட்சம் போல் மூல நூல்களின் மேற்கோள்களுடன் தமிழ் இலக்கியப் பகுதிகளை ஒப்பிட்டுக் காட்டும் பெருநூலாக வெளிவர வேண்டும்.

சந்தம் தேசிய இலக்கியப் பேரவையும் இந்நூலின் வழி விதையிலிருந்து விருட்சமாக மாறும் தருணத்தை நோக்கிப் பயணிக்கிறது.

நன்றி !

**செ. ஜகந்நாதன்**

ஒருங்கிணைப்பாளர், 'சந்தம்' தேசிய இலக்கியப் பேரவை

தனது வரலாற்றை அறியாத எந்த ஓர் இனத்தாலும் வரலாற்றைப் படைக்க இயலாது. பாரதிய இந்து தர்மத்தின் ஒரு பகுதியான தமிழினம் சிறப்புமிக்க வரலாற்றை உடையது. இன்று சிலர் தமிழர்கள் இந்துக்கள் அல்லர் என்று கூறி வருகின்றனர். தங்களது பொய்யை உண்மை என்று நிறுவ வரலாற்றைத் திரிக்கின்றனர். இதற்குச் சரியான எதிர்வினை ஆற்றாவிட்டால் அவர்களது பொய்ப் பரப்புரையே உண்மையாகவும், நாளை அதுவே வரலாறாகவும் ஆக்கப்படும். இதை முறியடிக்கவே சரியான வரலாற்றை மக்களுக்கு எடுத்துச் சொல்வது நம் கடமையாகும். அந்த வகையில் பண்டைய தமிழர் வரலாற்றை அறியப் பெரும் உதவியாக உள்ள "சங்க இலக்கியங்களை" ஆராய்ந்து அவற்றில் குறிப்பிட்டுள்ள சனாதன தர்மக் கருத்துக்கள் தொகுக்கப்பட்டு இந்நூல் உருவாக்கப்பட்டுள்ளது.

# சங்கத்தமிழ் காட்டும் சனாதன தர்மம்

## பண்பாட்டு தேசியம்

பாரத தேசமானது 'சர்தார் வல்லபாய் படேல்' அவர்களால் ஒன்றிணைக்கப்பட்ட இந்தியா ஆனது. ஒரே சட்டம் உருவாக்கப்பட்டு இந்தியக் குடியரசும் பிறந்தது. இந்தியா குடியரசாக இணைக்கப்படும் முன்பே பல்வேறு முடியரசுகளால் இணைக்கப்பட்டுவிட்டது. சக்கரவர்த்தி சந்திரகுப்த மௌரியர், தொடங்கி பேரரசர் அசோகர், சமுத்திர குப்தர், பேரரசர் ஹர்ஷர், மராட்டியப் பேரரசு என பாரத தேசத்தின் பெரும் பகுதி ஒரு குடையின்கீழ் ஈராயிரம் ஆண்டுகளாக ஆளப்பட்டு வந்ததே ஆகும்.

அதேபோல் சோழர்கள் தொடங்கி ராஷ்டிரகூடர்கள், யாதவர்கள், விஜயநகர மன்னர்கள் வரை தென் இந்தியாவை ஒரு குடையின்கீழ் ஆண்டனர். ஆகவே இந்தியக் குடியரசின் வயது நூறு வருடங்கள் கூட இல்லாமல் இருக்கலாம். ஆனால் முடியரசு ஈராயிரம் ஆண்டுகளுக்கும் மேலான வரலாற்றை உடையது.

அதனால் ஒன்றுபட்ட பாரதப் பண்பாட்டு தேசியத்தின் வயது கணக்கிட இயலாததாகும். இந்து சனாதன கலாச்சாரமே இப்பண்பாட்டு தேசியத்தின் அடித்தளமாகும்.

இமயம் முதல் குமரி வரை பண்பாட்டு தேசியத்தின் அடிப்படையில் பாரதம் ஒரே நாடுதான் என்னும் இச்சிந்தனை சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றது.

**"தென் குமரி, வட பெருங்கல்,**
**குண குட கடலா வெல்லை,**
**குன்று, மலை, காடு, நாடு**
**ஒன்று பட்டு வழி மொழியக்**
**கொடிது கடிந்து, கோல் திருத்தி"**

**-புறநானூறு - பாடல் - 17, 1-5**

என்னும் இப்புறநானூற்றுப் பாடல் அடிகள்,

தெற்கே குமரியையும், வடக்கே பெருங்கல்லாகிய இமயத்தையும், கிழக்கிலும், மேற்கிலும் கடல்களை எல்லையாகக் கொண்டும் நாவலந்தீவு எனும் பாரத தேசம் அமைந்துள்ளதைக் கூறுகிறது.

இதேபோல் மற்றும் ஒரு பாடலில்,

**"வடாஅது பனிபடு நெடுவரை வடக்கும்**
**தெனாஅது உருகெழு குமரியின் தெற்கும்**
**குணாஅது கரைபொரு தொடுகடல் குணக்கும்**
**குடாஅது தொன்றுமுதிர் பௌவத்தின் குடக்கும்**
**கீழது, முப்புணர் அடுக்கிய முறைமுதற் கட்டின்**
**நீர்நிலை நிவப்பின் கீழும் மேலது**
**ஆனிலை உலகத் தானும் ஆனாது"**

**- புறநானூறு - பாடல் - 6.3-7**

என வடக்கே பனி மலையான இமயமும், தெற்கே குமரியும், கிழக்கே சகர புத்திரர்களால் தோண்டப்பட்ட கடலும், மேற்கே தொன்மையான கடலும் சூழ்ந்திருக்கும் பாரத நாட்டைப் பற்றி கூறப்பட்டுள்ளது.

ஆகவே, இப்பாடல்கள் மூலம் தமிழர்கள் தங்களை பாரதப் பண்பாட்டுதேசியத்தின் அங்கமாகவே கருதினர் என்பதை அறியலாம்.

## வேதமும் வேள்வியும்

பாரதப் பண்பாட்டின் ஆணி வேராக இருப்பது வேதமே! வேதமும் வேள்வியும் இரண்டறக் கலந்தவை ! வேள்வி மூலமாக அக்னியில் நாம் தரும் பொருள்கள் தேவர்களைச் சென்றடையும் என்பதும், இதைப்பெற்று அவர்கள் திருப்தி அடைந்து நலமும், வளமும் தருவர் என்பதும் வைதீக நம்பிக்கை. தமிழகத்தில் வேள்வியும், வேதமும் சங்கக் காலத்திலிருந்தே மன்னர்களால் போற்றி வளர்க்கப்பட்டன. அதற்கான ஆதாரங்களுள் ஒரு பாடலைக் காண்போம்!

**"சொல் பெயர் நாட்டம் கேள்வி நெஞ்சமென்(று)**
**ஐந்(து) உடன் போற்றி அவை துணை ஆக**
**எவ்வம் சூழாது விளங்கிய கொள்கைக்**
**காலை அன்ன சீர்சால் வாய்மொழி**

உருகெழு மரபின் கடவுள் பேணியர்
கொண்ட தீயின் சுடர்எழு தோறும்
விரும்புமெய் பரந்து பெரும்பெயர் ஆவுதி"

-பதிற்றுப்பத்து பாடல் எண் - 21.1-7

என்னும் இப்பதிற்றுப்பத்து அடிகள், சொல் இலக்கண நூலும், பொருள் இலக்கண நூலும், ஜோதிட நூலும், வேத நூல்களாகிய ரிக், யஜுர், சாம, அதர்வண ஆகியவற்றைக் கற்று உணர்ந்து, உள்ளே அடக்கிய நெஞ்சமும், பிற உயிர்களுக்குத் துன்பம் தராமை என்னும் கொள்கையும், உண்மையும் உறுதியும் கொண்டவர்கள் முனிவர்கள். அவர்கள் உதிக்கும் சூரியனைப் போன்ற சிறப்புடைய உட்பொருளாக உள்ள இறைவனை வணங்குவதற்கு வேள்வித்தீ வளர்ப்பர். அப்பொழுது சுடர்விட்டு எரியும் அக்னியிலிருந்து ஆவுதிப் புகை எழுந்து நிறையும் சிறப்புமிக்க சேர நாடு என்னும் செய்தியைக் கூறுகிறது.

இப்பாடலை இயற்றியவர் பாலை கௌதமனார், பாடப்பட்டவன் பல்யானைச் செல்கெழு குட்டுவன் எனும் சேர மன்னன் ஆவான். இவனது அரசாட்சியின் சிறப்பைப் பாட வந்த புலவர் அவனது சேர நாட்டில் வேள்விப் புகை எங்கும் நிறைந்திருந்தது என்கின்றார். இதன் மூலம் தமிழ் அரசர்கள் பலரும் வேத, வேள்வியைப் போற்றிப் பாதுகாத்தவர்கள் என்னும் செய்தி உறுதி ஆகிறது. இங்கு வேதமும், வேள்வியும் ஆரியர் பண்பாடு, தமிழ் மக்களுக்கு அந்நியமானது, ஈரானிலிருந்து வந்தது, போன்ற பொய்மைக் கருத்துக்கள் மறுக்கப்படுகின்றன.

## தாமரை மலரும் தலை நகரங்களும்

சங்கத்தமிழ் பற்றிப் பேசும்போது சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த மதுரையைப் பற்றிப் பேசாமல் இருக்க முடியுமா? இன்றளவும் தமிழ்நாட்டின் கலாச்சாரத் தலைநகரமாக இருப்பது மதுரையம்பதியே! அதனால் பல சங்கப் புலவரின் பெயர்களுக்கு முன் 'மதுரை' என்று ஊர்ப் பெயரும் இடம் பெறும். மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் தான் பழம்பெரும் நூல்கள் அரங்கேற்றப்பட்டன. அத்தமிழ்ச் சங்கத்தில் இறையனாரான சிவபெருமானும், குன்றெறிந்த முருகவேளும், அகத்தியரும், துவரைக் கோமான் ஆகிய

கண்ணபிரானும் புலவர்களாக வீற்றிருந்தனர் என்று இறையனார் அகப்பொருள் எனும் நூல் கூறுகின்றது.

இத்தகைய சிறப்பு வாய்ந்த மதுரை மாநகரம் எத்தகைய வடிவத்தில் இருந்தது என்பதைப் பார்க்கலாம்.

**மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரைப்**
**பூவொடு புரையும் சீரூர், பூவின்**
**இதழகத் தனைய தெருவம் இதழகத்து**
**அரும்பொகுட் டனைத்தே அண்ணல் கோயில்**

**-பரிபாடல் திரட்டு - 7.1-4**

என்னும் இப்பாடல் அடிகளின் பொருளாவது, 'திருமாலது திருநாபியில் தோன்றிய தாமரை மலரைப் போன்ற வடிவழகும், தெய்வீகத் தன்மையும் உடையது மதுரை மாநகர். தாமரை மலரின் இதழ்களைப் போன்றவை மதுரை மாநகரின் தெருக்கள். தாமரை மலரின் மகரந்தப் பொகுட்டினைப் போன்றது. மதுரை நகர் நடுவே உள்ள அண்ணல் கோவில்' என்பதாகும். அண்ணல் கோவில் என்பது திரு ஆலவாய் அரசனான சிவபெருமான் கோவிலையும் மீன் கொடியுடைய பாண்டிய மன்னனது அரண்மனையையும் குறிப்பதாக இருவேறு கருத்துக்கள் நிலவுகின்றன.

இப்பாடலில் புலவர் மிக நுட்பமாக மதுரையின் அழகைப் படம் பிடித்துக் காட்டுகிறார். மதுரையின் வடிவத்தைச் சாதாரண தாமரை மலரோடு ஒப்பிடவில்லை. திருமாலது நாபியில் தோன்றிய தாமரை மலரோடு ஒப்பிடுகிறார். மாமதுரையின் புனிதத் தன்மையைக் கருதி தெய்வீக மலரோடு ஒப்பிடுவதாகக் கருதலாம். மதுரையைப் போலவே பழமையான மற்றொரு நகரம் காஞ்சி ஆகும்.

**'புஷ்பேஷு ஜாதி, புருஷேஷு விஷ்ணு**
**நாரிஷுரம்பா நகரேஷு காஞ்சி'**

என்பது காளிதாஸர் பெயரில் வழங்கப்பெறும் புகழ் பெற்ற வடமொழிச் செய்யுள் ஆகும். இதன் பொருளாவது "மல்லிகை மலர்களுள் சிறந்தது. விஷ்ணு ஆடவர்களுள் சிறந்தவர், ரம்பா பெண்களுள் சிறந்தவள், காஞ்சீபுரம் நகரங்களில் சிறந்தது" என்பதாகும்.

அத்தகைய காஞ்சியின் நகரமைப்பை பெரும்பாணாற்றுப் படையில் வர்ணிக்கும் கடியலூர் உருத்திரங் கண்ணனார்.

**" நீனிற வுருவி னெடியோன் கொப்பூழ்**
**நான்முக வொருவர் பயந்த பல்லிதழ்த்**
**தாமரைப் பொகுட்டிற் காண்வரத் தோன்றிச்**
**சுடும ணோங்கிய நெடுநகர்"**

**- பெரும்பாணாற்றுப்படை -402-406.**

என்கிறார்.

அதாவது நீலநிற உருவிலுள்ள நெடியோன் ஆகிய திருமால் நாபியிலிருந்து தோன்றிய பிரம்மதேவன் அமர்ந்திருக்கின்ற தாமரை மலரின் இதழ்களைப் போல அடுக்கடுக்கான தெருக்களுடன் காஞ்சி நகரம் இருந்தது என்ற செய்தி கூறப்படுகிறது.

மற்றைய சமயங்களில் தங்கள் வழிகாட்டிகள் பிறந்த இடம் அல்லது முக்தி பெற்ற இடம் ஆகியவையே புனித ஸ்தலங்களாகக் கருதப்படுகின்றன. ஆனால், தான் வாழும் நாட்டையோ, நகரத்தையோ, நதியையோ புனிதமானதாகக் கருதும் மனப்பான்மை வைதீக இந்துக்களிடம் மட்டுமே உள்ளது. அதனால் தான் சங்கப் புலவர்கள் மதுரையையும், காஞ்சியையும் தெய்வீகத் தாமரையின் உருவம் உடையதாகக் கண்டனர்.

## திலகமும் நகரமும்

இதேபோல மதுரை மாநகருக்குப் பெருமை சேர்க்கும் வைகை ஆற்றின் சிறப்பைக் கூறும் பரிபாடல் திரட்டின் ஒன்பதாம் பாடல்.

**"செய்யாட் கிழைத்த திலகம்போற் சீர்க்கொப்ப**
**வையம் விளங்கிப் புகழ் பூத்தலல்லது**
**பொய்யாத லுண்டோ மதுரை புனைதேரான்**
**வையை யுண்டாகு மளவு"** என்கிறது.

இதன் பொருளாவது, 'திருமாலின் பத்தினியாகிய திருமகள் நெற்றியில் திலகம்போல், சிறப்புற்ற மதுரை மாநகருக்கு வைகை ஆறு திலகம் போல உள்ளது. இந்த ஆறு உள்ள வரையிலும் மதுரை மாநகரின் புகழும் நிலைக்கும் என்பது பொய்யாகுமோ? பொய்யாகாது' என்பதாகும்.

திருமகள் வெற்றியின் தெய்வமாவாள். ஸம்ஸ்க்ருதத்தில் 'ஸ்ரீ' என்றும் தமிழில் 'திரு' என்றும் மிக உயர்வாகப் போற்றப்படும் திருமகளின் நெற்றியில் உள்ள திலகம் மங்களத்தின் சின்னம் ஆகும். மேலும் அவள் திருமாலின் மனைவி என்பதால் அவள் தீர்க்க சுமங்கலி ஆகிறாள். அதனால் திருமகளின் நெற்றித் திலகம் என்றும் அழியாததும், நிலைத்திருப்பதும் ஆகும். ஆகவே தான் வைகை ஆறும் நிலைத்த தன்மையை உடையது என்று கூறுவதற்குப் புலவர், திருமகளின் திலகத்தை இங்கு உவமிக்கிறார்.

## மறை ஒலிக்கும் மாமதுரை

மதுரை மாநகரின் அமைப்பைத் திருமாலின் நாபியிலிருந்து எழும் தாமரைக்கும், மதுரையில் பாயும் வைகை ஆற்றைத் திருமகளின் நெற்றித் திலகத்திற்கும் ஒப்பீடு செய்த சங்க இலக்கியமான பரிபாடலைப் போல் தமிழ் மொழியின் முதல் காப்பியமான சிலப்பதிகாரமும் மதுரை மாநகர்க்கும் மறைகளுக்கும் உள்ள தொடர்பைப் பேசி இவ்வூரின் தெய்வீகச் சிறப்பை உறுதி செய்கிறது. மதுரையில்,

**"மறை நாஓசை அல்லது யாவதும்**
**மணி நாஓசை கேட்டதும் இலனே"**

எனச் சிலப்பதிகாரத்தின் 'கட்டுரை காதை' கூறுகின்றது.

அதாவது சீரும் சிறப்பும் மிக்க இந்த மதுரை மாநகரிலே அந்தணர்கள் ஓதும் மறைகளான வேத முழக்கம் மட்டுமே எங்கும் கேட்கும். ஒருபோதும் அரசிடம் குறைகளைச் சொல்லி முறையிட மக்கள் அடிக்கும் ஆராய்ச்சி மணி ஒலி கேட்காது. அந்தளவிற்கு மக்களுக்குக் குறையே இல்லாமல் பாண்டியர்கள் ஆட்சி செய்தனர். ஆன்மீகம் செழிக்கும் விதமாக அந்தணர்கள் வேத மந்திரங்களை ஓதிக்கொண்டே இருந்தனர் என்பது சிலப்பதிகாரம் கூறும் செய்தி ஆகும்.

சங்க காலம் முதல் இக்காலம் வரை நாம் வசிக்கும் ஊரையே தெய்வீக அம்சம் பொருந்தியதாகப் பார்ப்பது தமிழரின் பண்பாடாகும். அதற்குக் காரணம் வேத கலாச்சாரமும், அது தமிழருடைய வாழ்வியலில் கொண்டிருந்த பெரும் தாக்கமும் ஆகும் என்பதை மேலுள்ள இலக்கியச் சான்றுகளைக் கொண்டு அறியலாம்.

## வேதியர் வழி நடந்த வேந்தர்

வேதத்தையும், வேள்வியையும் முதன்மையாகக் கொண்டது சமயம் வைதீக சமயமாகும். வேதமும், வேள்வியும் சங்கக் காலத்திலிருந்தே தமிழரிடத்தே சிறப்பிடம் பெற்றிருந்தன. ஆகவே இவற்றைக் காத்து, வளர்த்த வேதியர்களான அந்தணரும் உயர்ந்த சமூக அந்தஸ்து பெற்றிருந்தனர். வைதீக அந்தணர்களைச் சிலர் கைபர் போலன் கணவாய் வழியாக வந்தவர்கள் என்று கூறி அந்நியப் படுத்த முயல்கின்றனர். ஆனால் சங்க இலக்கியங்களோ வேத நெறிப்படி அறுதொழில் புரியும் அந்தணர்களைத் தமிழர்கள் என்றே கூறுகின்றன. அறத்தை போதிக்கும் மறை நூல்களைக் கற்ற அந்தணர்கள் கூறிய வழியில் சத்திரியர்களான அரசர்கள் அரசாண்டனர் என்பதும் விளக்கப்பட்டுள்ளது.

சான்றாக,

**"ஓதல் வேட்டல் அவை பிறர் செய்தல்**
**ஈதல் ஏற்றல் என்று ஆறு புரிந்து ஒழுகும்**
**அறம் புரி அந்தணர் வழிமொழிந்து ஒழுகி**
**ஞாலம் நின் வழி ஒழுக பாடல் சான்று"**

**- பதிற்றுப்பத்து பாடல் எண் 24, 6-9**

என்னும் இப்பாடல் அடிகளில் அந்தணர்களுடைய ஆறு கடமைகள் தெளிவாகக் கூறப்பட்டுள்ளன. வேதங்களைக் கற்று ஓதுவதும், அதைப் பிறர்க்குக் கற்பித்து ஓதச் செய்வதும், வேள்வி செய்வதும், வேள்வியைப் பிறர் செய்ய வழிகாட்டுவதும், தகுதியுடையோருக்குத் தானம் செய்வதும், முறையானவர் இடமிருந்து தானம் பெறுவதும் அந்தணர்களது ஆறு கடமைகளாகும் இத்தகைய ஆறு தொழிலுடைய அந்தணர் மொழிவதை அப்படியே வழி மொழிந்து சேர மன்னன் ஆட்சி செய்தான். அதனால் உலகமே அவனது கட்டளையைக் கேட்டு நடந்தது என்கிறார் புலவர்.

மேற்கண்ட பாடல் தரும் நுட்பமான செய்தியாவது மன்னர்களே சகல அதிகாரங்களும் உடையவர்களாக இருந்தாலும், வேதங்களைக் கற்ற அந்தணர் கூறிய வழி தான் நடந்துள்ளனர் என்பதாகும்.

## சங்க இலக்கியத்தில் விநாயகர்

தமிழகத்தில் சமீப காலங்களில் விநாயகர் வழிபாடு மிக எழுச்சியுடன் கொண்டாடப்பட்டு வருகிறது. ஆனால் ஒரு தரப்பினர் சங்கக் காலத்தில் விநாயகர் வழிபாடு இல்லை. அது பிற்காலத்தில் சிறுத்தொண்டர் என்னும் பரஞ்சோதியாரால் வடக்கில் உள்ள வாதாபியிலிருந்து கொண்டு வரப்பட்டது என்று கூறுகின்றனர். ஆனால் சங்க இலக்கியமான பரிபாடலில் விநாயகர் பற்றிய குறிப்பு கிடைக்கின்றது.

**முக்கை முனிவ! நாற்கை அண்ணல்!**
**ஐங்கை மைந்த ! அறுகை நெடுவேள்!**

**- திருமால் வாழ்த்துப்பாடல் 3- 35, 36**

திருமாலைப் பற்றிய இந்தப் பரிபாடலில் 'திருமால் ஆகிய நீயே முக்கை முனிவன் அதாவது தவத்தில் இருக்கும் சிவபெருமானாகவும், நாற்கரத்தோன் ஆகிய பிரம்மதேவனாகவும், ஐந்து கரங்களை உடைய கணபதியாகவும், ஆறு கரங்களை உடைய முருகனாகவும் உள்ளாய் ' எனச் சங்கப்புலவர் புகழ்கிறார். இதில் விநாயகர் 'ஐங்கை மைந்த' என அழைக்கப்படுகிறார். வைதீகக் கடவுளர்களுள் ஐந்து கைகளுடைய தெய்வம் விநாயகர் ஒருவரே ஆவார். ஆகவே உறுதியாக இது கணபதியைக் குறிப்பதே ஆகும் என்று துணியலாம்.

## முருகன் வைதீகக் கடவுளா?

தற்காலத்தில் தமிழ் தேசியம் என்னும் கொள்கை உடையவர்கள் நேரடியாக இறை மறுப்பில் ஈடுபடாமல் தெய்வங்களுக்கு வழங்கப்படும் இறைத் தன்மைகளை நீக்கி அவர்களை மண்ணுலகில் வாழ்ந்து மடிந்த மனிதர்களாகச் சித்தரிக்கும் விஷம பிரச்சாரத்தை மேற்கொள்கின்றனர். சான்றாக முருகக் கடவுள் குறிஞ்சி நிலத் தலைவன் மட்டுமே. அவருக்கும் வேத வழிபாட்டிற்கும் தொடர்பில்லை. அவரை வடமொழி மந்திரங்களால் வணங்குவது ஆரியத் திணிப்பு போன்ற கருத்துக்கள் பரப்பப்பட்டு வருகின்றன.

ஆனால் முருகப் பெருமானைப் போற்றும் திருமுருகாற்றுப் படையோ இவர்களின் கருத்தை மறுக்கும் வலுவான சான்றுகளைத் தாங்கி உள்ளது.

"மூன்றுவறைக் குறித்த முத்தீச் செல்வத்து
இருபிறப் பாளர் பொழுதறிந்து நுவல
ஒன்பது கொண்ட மூன்றுபுரி நுண்ஞாண்
புலராக் காழகம் புலர உடீஇ,
உச்சிக் கூப்பிய கையினர் தற்புகழ்ந்து
ஆறெழுத்து அடக்கிய அருமறைக் கேள்வி
நாஇயல் மருங்கில் நவிலப் பாடி
விரையுறு நறுமலர் ஏத்திப் பெரிந்துஉவந்து
ஏரகத்து உறைதலும் உரியன் அதான்று"

-திருமுருகாற்றுப்படை 181-189

என்னும் இச்செய்யுள் அடிகள் "ஏரகம் என்னும் படைவீட்டில் (ஸ்வாமி மலை) எழுந்தருளியுள்ள முருகப் பெருமானை, மூன்று வகையான தீயை வளர்ப்போரும், ஒன்பது நூலை மூன்றாக்கி முப்புரி நூல் - பூணூல் அணிந்த இரு பிறப்பாளர்களுமான அந்தணர்கள், ஈரம் உலரா ஆடையுடனே, தங்கள் தலைமீது இரு கரங்களைக் கூப்பி ஆறெழுத்து மந்திரமான 'சரவண பவ' என்பதன் பொருள் அடங்கிய வேதங்களை மனமுருகிப் பாடி நறுமணம் மிக்க மலர்களை ஏரகத்தில் உறையும் முருகப் பெருமானுக்கு அர்ப்பணித்து வணங்கினர்" எனப் பொருள் உடையவை.

இதன் வழியே 'சரவண பவ' என்ற ஆறெழுத்து ஸம்ஸ்கிருத மந்திரத்தைக் கூறி முருகனை வழிபட்ட முறை தமிழகத்தில் இருந்ததை அறியலாம்.

மேலும் அதே திருமுருகாற்றுப்படையில்...

"ஒருமுகம்,
மந்திர விதியின் மரபுளி வழாஅ
அந்தணர் வேள்வி ஓர்க்கும்மே"

-திருமுருகாற்றுப்படை 94-96

என வேத விதிகளைப் பின்பற்றி அந்தணர்கள் செய்யும் வேள்விக்கு முருகனின் ஆறு முகங்களுள் ஒன்று பாதுகாப்பு தரும் செய்தி இடம் பெற்றுள்ளது. மேற்கண்ட திருமுருகாற்றுப்படை செய்திகளின் வழியாக தமிழர்கள் முருகனை வைதீகத் தெய்வமாகவே கண்டனர் என்பது புலனாகிறது.

## சங்க காலத்தில் சிவ வழிபாடு

சங்க காலத்தில் வேதக் கடவுளர் ஆன திருமால் மற்றும் முருக வழிபாடு போன்றே சிவ வழிபாடும் சிறந்து விளங்கியது என்பதற்குப் பல சங்க இலக்கியப் பாடல்கள் சான்றாக அமைகின்றன. அதியமானைப் புகழ்ந்து ஔவையார் பாடியுள்ள ஒரு பாடலில்,

**"பால்புரை பிறைநுதல் பொலிந்த சென்னி**
**நீலமணிமிடற் றொருவன் போல**
**மன்னுக பெரும நீயே"**

**- புறநானூற்று பாடல் 91, 5-7**

எனப் பால்போன்ற வெண்மை நிறமுடைய பிறையைச் சூடியவனும் ஆலகால நஞ்சை உண்டதால் நீலநிறமாக மாறிய கழுத்தை உடையவனுமாகிய சிவபெருமானைப் போல் நீ புகழ் பெற்று வாழ வேண்டும் என்று அதியமானை ஔவையார் வாழ்த்துகிறார்.

அதேபோல் கலித்தொகை 150ஆவது பாடல் சிவபெருமானைப் பற்றிய பல்வேறு செய்திகளை வழங்குகிறது.

**"பிறங்கு நீர் சடைக் கரந்தான்**
**அணி அன்ன நின் நிறம்" - 150, 9**

என்று சிவபெருமான் கங்கையைத் தன் சடையில் தாங்கியவர் என்பதும் அவர் பொன்னிறம் உடையவர் என்பதும்

**"உருவ ஏற்று ஊர்தியான் ஒளி அணி நக்கன்ன" -150, 13**

என அவர் காளையை வாகனமாகக் கொண்டவர் என்பதும் அழகிய சிரிப்பை உடையவர் என்பதும்

**"புதுத் திங்கட் கண்ணியான்**
**பொன் பூண் ஞான்று அன்ன" - 150, 17**

எனச் சிவபெருமான் தன் தலையில் வளர் பிறையைச் சூடியவர் என்பதும்

**"அரும் பெறல் ஆதிரையான் அணி பெற மலர்ந்த**
**பெருந் தண் சண்பகம் போல " - 150, 20-21**

எனச் சிவபெருமான் திருவாதிரை நாளுக்கு உரியவன் என்பதும் குளுமையான செண்பகப் பூவினை அணிபவன் என்பதும் மேற்குறித்த பாடல் அடிகள் மூலமாக அறிய முடிகிறது.

இதன் மூலமாகப் பெறப்படுவது யாதெனில் புராணங்களிலும் சங்க இலக்கியங்களிலும் இடம் பெறும் சிவபெருமானைப் பற்றிய செய்திகள் பொதுத் தன்மைகள் வாய்ந்தவைகளாகவே உள்ளன என்பதாகும்.

## ஸ்ரீ ராமபிரானைப் போற்றிய தமிழர்கள்

ஸ்ரீ ராமபிரான் தமிழருக்கு அன்னியமான வடநாட்டுத் தெய்வம் என்னும் பிழையான பிரச்சாரம் பலரால் மேற்கொள்ளப்பட்டு வருகின்றது. ஆனால், இராமபிரானைப் பற்றிய பல்வேறு தகவல்கள் பழந்தமிழ் இலக்கியங்களில் நிறைந்துள்ளன.

இராமபிரான் முன்னோர்களுள் ஒருவரான சிபிச் சக்கரவர்த்தியின் வரலாறு புறநானூற்றில் பேசப்படுகிறது.

**"கூருகிர்ப் பருத்தின் ஏறுகுறித்,தொரிஇத்,**
**தன்னகம் புக்க குறுநடைப் புறவின்**
**தபுதி யஞ்சிச் சீரை புக்க**
**வரையா ஈகை உரவோன் மருக"**

**- புறநானூறு பாடல் - 43, 7-10**

என்னும் இப்பாடலில் தன்னிடம் அடைக்கலமாக வந்த ஒரு புறாவைக் காக்கத் தன் உயிரையே தரத் துணிந்த சிபிச் சக்கரவர்த்தியின் தியாகம் போற்றப்படுகின்றது. அத்தகைய சிபியின் வழிவந்த சோழன் நலங்கிள்ளியின் தம்பி மாவளத்தான் மீது இப்பாடல் பாடப்பட்டுள்ளது.

இதன் காரணமாகத் தான் பிற்காலச் சோழர்கள் தங்கள் செப்பேடுகளிலும் கல்வெட்டுகளிலும் தங்களை சூரிய வம்சத்தில் தோன்றிய சிபியின் வழி வந்த ஸ்ரீ ராமனின் வழித் தோன்றல்கள் எனப் பெருமிதமாகக் கூறிக் கொண்டனர்.

**"தாதை ஏவலின் மாதுடன் போகிக்**
**காதலி நீங்கக் கடுந்துயர் உழந்தோன்**
**வேத முதற்வற் பயந்தோன் என்பது**
**நீஅறிந் திலையோ நெடுமொழி அன்றோ?"**

**-சிலப்பதிகாரம் - மதுரை காண்டம் -**
**ஊர் காண் காதை-45-49**

என்னும் இச் சிலப்பதிகார அடிகள் இராமபிரானை பிரமனைப் படைத்த திருமாலின் அவதாரம் என்று கூறுகிறது. மேலும் இராமபிரானின் சரித்திரம் நெடுங்காலமாகத் தமிழ் மக்களிடையே அறியப்பட்டு இருந்தது என்பதை வலியுறுத்தும் விதமாக 'நெடுமொழி' என்று கூறப்படுகிறது.

**நெடியோன் மயங்கி நிலமிசைத் தோன்றி**
**அடல்அரு முந்நீர் அடைத்த ஞான்று**
**குரங்கு கொண்ர்ந்து எறிந்த நெடுமலை எல்லாம்**
**அணங்குஉடை அளக்கர் வயிறு புக்காங்கு**

**மணிமேகலை - உலக அறவி புக்க காதை -10-13**

எனும் இந்த மணிமேகலை அடிகள் ஸ்ரீராமபிரான் வானர சேனையின் உதவியோடு கடலில் இலங்கைக்குப் பாலம் கட்டிய செய்தியைக் கூறுகிறது.

**"மூவலகும் ஈரடியான் முறைநிரம்பா வகைமுடியத்**
**தாவியசே வடிசேப்பத் தம்பியொடுங் கான்போந்து**
**சோவரணும் போர்மடியத் தொல்லிலங்கை கட்டழித்த**
**சேவகன்சீர் கேளாத செவி என்ன செவியே"**

**-சிலப்பதிகாரம் - ஆய்ச்சியர் குரவை**

என்ற இந்தச் சிலப்பதிகார அடிகள் இராவணனை வென்ற ஸ்ரீராமபிரானின் வீரத்தைப் போற்றுகின்றன.

மேற்கூறிய இலக்கியச் செய்திகள் வாயிலாக ராமகாதை தமிழர்கள் வாழ்விலும் வழிபாட்டிலும் இடம் பெற்றிருந்தது உறுதியாகின்றது.

## ஸ்ரீ கிருஷ்ணரே மாயோன்

முல்லை நிலத்தெய்வம் மாயோன் ஆவார். மாயோன் என்பது ஸ்ரீகிருஷ்ணனைக் குறிக்கும் தமிழ்ப் பெயர் ஆகும். தமிழில் 'மா' - என்பதும் ஸமஸ்க்ருதத்தில் கிருஷ்ண என்ற சொல்லும் கருமை நிறத்தைக் குறிக்கும். ஆதலால் ஸ்ரீகிருஷ்ணனே மாயோன் ஆவர்.

அந்த மாயோன் ஆகிய கிருஷ்ணன் தன் மாமன் கம்சனால் அனுப்பப்பட்ட குதிரை வடிவ அசுரனான கேசிகனை, வாயைப் பிளந்து கொன்ற நிகழ்ச்சியைக் கண்ணனின் வரலாற்றைச் சொல்லும் பாகவத புராணம் பேசுகிறது. இவ் வரலாற்றை சங்கத் தமிழர் அறிந்திருந்தனர். எனவே,

"மேவார் விடுதந்த கூந்தல் குதிரையை
வாய் பகுத்து இட்டுப்புடைத்த ஞான்று
இன்னல் கொல்
மாயோன் என்று உட்கிற்று, என் நெஞ்சு!"

-கலித்தொகை - 103

என ஏறுதழுவுதலில் ஈடுபட்ட ஆயர்குல வீரனுக்குக் கேசிகனைக் கொன்ற கண்ணபிரான் உவமிக்கப்படுகிறார். இப்பாடலின் மூலம் தமிழர்களின் முல்லைநிலத் தெய்வமான மாயோன் வேறு புராணங்கள் கூறும் ஸ்ரீகிருஷ்ணன் வேறு என்னும் கருத்து மறுக்கப்படுகிறது. இன்றும் நாட்டுப்புற மக்கள் ஸ்ரீகிருஷ்ணரை மாயாவதாரன், மாயவர், மாயழகு போன்ற பெயர்களில் வணங்குகின்றனர்.

## அசுரர்கள் தமிழர்களா?

ஆரிய திராவிட இனவாதக் கோட்பாட்டை முன் வைக்கும் சிலர் தமிழர்களை பாரதப் பண்பாட்டு தேசியத்திலிருந்து பிரித்தாளும் நோக்கில் அரக்கர்களையும் அசுரர்களையும் தமிழர்கள் என்றும் அவர்களை வதைத்த தெய்வங்களை ஆரியர்களென்றும் திரிபு ஆராய்ச்சிகளைப் பரப்பி வருகின்றனர். ஆனால்,

"கடுந்தெறல் இராம னுடன்புணர் சீதையை
வலித்தகை யரக்கன் வெளவிய ஞான்றை
நிலஞ்சேர் மதரணி கண்ட குரங்கின்
செய்முகப் பெருங்கிளை இழைப்பொலித் தாஅங்கு
அறாஅ அருநகை இனிது பெற்றிகுமே"

- புறநானூறு பாடல் - 378, 18-22

என்னும் புறநானூற்றுப் பாடல் இராவணனை "வலித்தகை அரக்கன்" என்று இகழ்கின்றது. அது போலவே முருகப் பெருமான் சூரனை வதைத்த நிகழ்வை

**"சூர்மருங்கு அறுத்த சுடரிலை நெடுவேல்**
**சினம்மிகு முருகன் தண்பரங்குன்றத்து"**

**- அகநானூறு பாடல் -59, 10-11**

எனப் போற்றுகிறது. அரக்கனான இராவணனும் அசுரனான சூரனும் தமிழ் மன்னர்களாக இருந்திருப்பின் சங்கப் புலவர்கள் இவ்வாறு பாடியிருப்பார்களா என்பது சிந்தனைக்குரியது.

## இறைவன் ஒருவனே!

தமிழர்கள் விநாயகர், முருகன், சிவன், திருமகள், திருமால், இராமன், கண்ணன் எனப் பல தெய்வங்களை வணங்கிய போதிலும் 'ஏகம் சத் விப்ரா: பஹுதா வதந்தி' என்னும் வேதக் கொள்கையைப் பின்பற்றி இவ்வனைத்து தெய்வங்களும் ஓர் இறைவனில் இருந்தே உருவானவை என்னும் கொள்கை உடையவராய்த் திகழ்ந்தனர் என்பதைப் பின்வரும் சங்கப் பாடல் உறுதி செய்கிறது.

**"தீவளி விசும்பு நிலன் நீர்ஐந்தும்**
**ஞாயிறும், திங்களும், அறனும், ஐவரும்,**
**திதியின் சிறாரும், விதியின் மக்களும்,**
**மாசு இல் எண்மரும், பதினொரு கபிலரும்,**
**தாமா இருவரும், தருமனும், மடங்கலும்,**
**மூவேழ் உலகமும், உலகினுள் மன்பதும்,**
**மாயோய்! நின்வயின் பரந்தவை உரைத்தேம்**
**மாயா வாய்மொழி உரைதர வலந்து"**

**-பரிபாடல் - திருமால் வாழ்த்து பாடல் - 3, 1-10**

என்னும் இப்பாடலில் 'தீ, ஆகாயம், நிலம், நீர், காற்று ஆகிய பஞ்ச பூதங்களும், சூர்ய சந்திரர்களான இரு சுடர்களும், அறம், பொருள், இன்பமும், செவ்வாய், புதன், வியாழன், சுக்கிரன், சனி ஆகிய ஐந்து கிரகங்களும், குற்றமற்ற அஷ்ட வசுக்களும், திதி, அதிதியின் புத்திரர்களான தேவாசுரர்களும், பதினொரு உருத்திரர்களும், இரு அஸ்வினி குமாரர்களும், தர்மதேவன் ஒருவனும், இருபத்தொரு லோகங்களும், அவற்றில் உள்ள எல்லா

உயிர்களும் திருமாலால் படைக்கப்பட்டவையே என்று வேதம் கூறுகிறது. அதை அப்படியே ஏற்று நாங்களும் திருமாலைப் பாடுகிறோம்' என்கிறார் புலவர். இதிலிருந்து சங்கத் தமிழர் வைதீகச் சமயத்தவரே என்பது புலனாகிறது.

## நிறைவாக...

சங்கத் தமிழுக்கும் சனாதன தர்மத்துக்கும் இருக்கும் தொடர்பு குறித்த சான்றுகள் இன்னும் பல்கிப் பெருகி உள்ளன. ' ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம்' என்னும் பழமொழிக்கு ஏற்ப ஒருசில செய்திகள் மட்டுமே இங்குத் தொகுக்கப்பட்டுள்ளன.

விரிவான ஆய்வுக் களத்தைக் கொண்ட இப்பகுதி மேலும் மேலும் நம் தேடலுக்கு வழி வகுக்கும் நிதிச் சுரங்கம். எதிர்காலத்தில் அப்பணியை மேற்கொள்ளத் தமிழணங்கு துணை செய்வாள் என்ற நம்பிக்கையுடன் நிறைவு செய்வோம்.

**வந்தே மாதரம்!**

## நன்றி நவிலல்

தமிழார்வம் ஊட்டிய பாட்டியார்

**ஸ்ரீமதி. கிருஷ்ணவேணி ராகவனுக்கும்**

எழுத்தார்வத்துக்கு உறுதுணை செய்யும்

**என் பெற்றோருக்கும்**

அணிந்துரை அளித்த **தர்மப் போராளி**

திரு. **ஹெச். ராஜாஜி** அவர்களுக்கும்

நூலாக்கத்தில் துணைநின்று

திரு. **விஜய் பார்த்தசாரதி,**

முனைவர். T.R. **தாமோதரன்** ஆகியோருக்கும்

திரு. **தேவராஜ்** மற்றும்

திரு. **தேவப்ரியாஜீ** ஆகிய முகநூல் நட்புகளுக்கும்

நூலை வெளியிடும் **சந்தம் தேசிய இலக்கியப் பேரவை**

மற்றும் அதன் ஒருங்கிணைப்பாளர்

திரு. **செ. ஜகந்நாதன்** அவர்களுக்கும்

***நெஞ்சார்ந்த நன்றிகளை நவில்கிறேன்.***

என்றும் தேசப்பணியில்

**விஷ்ணு சர்மா**

வாழ்க செந்தமிழ் ! வாழ்க நற்றமிழர்!!

வாழிய பாரத மணித்திரு நாடு

